Reg. No. M.

தனிப்பிரிதி 1 அணா

ஆசிரியர் :
யாழ்ப்பாணம்
தென்கோவை:
ச. கந்தையபிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

REPUBLIQUE FRANÇAISE

Liberté - Egalité - Fraternité

# VITTAGAM

LE DIRECTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
TAMIL PANDIT
JAFNA
CEYLON.

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமை தோறும் வெளிவருவது.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க்கல்லா லரிது.— | குறள்.

VOl, I. { புதுவை, ஸ்ரீமுகவருஷ கார்த்திகைமீ உஉ வ (7—12—33) } No. 2

## திருவாய்மொழி.

யானும் தானா யொழிந்தானை யாதும் யவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனுமாகிப் பணைத்த தனிமுதலை
தேனும் பாலும் கன்னலு மமுதுமாகித்தித்தித்து — என்
ஊனிலுயிரினுணர்வினில் நின்ற வொன்றை யுணர்ந்தேனே.

வானே தருவானெனக்கா யென்னோடொட்டி
ஊனேய்குரம்பை யிதனுள்புகுந்து — இன்று
தானேதடு மாற்றவினைகள் தவிர்த்தான்
தேனேபொழில் தென்திருப்பேர் நகரானே.

எந்நாளேம்பெருமா னுன்றனக்கடியோமென் றெழுத்துப்பட்ட
வந்நாளே அடியோங்க ளடிக்குடில் வீடுபெற்றுய்ந்தது காண்
செந்நாள் தோற்றித் திருமதுரையுட்சிலைகுனித்து — ஐந்தலைய
பைந்நாகத் தலைப்பாய்ந்தவனே! உன்னைப்பல்லாண்டு கூறுதுமே.

உ

திருவருள் துணை.




காலமுண்டாகவே காதல்
செய்துய்மின் கருதரிய
ஞாலமுண்டானேடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண்டானெங்கள் பாண்டிப்
பிரான்தன் னடியவர்க்கு
மூலபண்டாரம் வழங்கு
கின்றுன்வந்து முந்துமினே.
(திருவாசகம்.)

# வித்தகம்.

புதுவை,
ஸ்ரீமுக கார்த்திகை மீ 22உ

## சைவ சமயம்.

சைவசமயம் என்பது யாது? அது தான், சைவத்தை அடையச்செய்யும் சமயம் என்று கூறப்படும். சைவம் சிவசம்பந்த முடையது எனப்படும். "சைவம்சிவனுடன் சம்பந்தமாவது" என்பதுதிருமந்திரம் (5—ம் தந். சாயுச்சியம், செ. 1) சிவம் சைவம் என்று ஆயதுஎங்ஙனம்என்பது சென்றவார சங்கியையில் "எமது கொள்கை" என்னும் கட்டுரையில் விளக்கிக் கூறப் பட்டது. ஆங்குக் காண்க. சிவம் என்பது யாது? எனின், சிறிது கூறப் படும். அண்டபிண்ட சராசரங்கள் அனைத்தையும் தனக்கு அங்கமாகக் கொண்டு அவையாவும் தோன்றி ஒடுங்குதற்குரிய மகாலிங்கமாய்— நிலைக்களமாய் — பதியாய் — வியாப்பியமாய் நிற்பது எதுவோ, அவையாவுமாய் அவற்றின் உள்ளும் புறம்புமாய் அவற்றுண் மறைந்து மறை பொருளாய் அவற்றிற்கு எட்டாததாய் நிற்பது எதுவோ, சத்தியமாகிய தன்னை மறைத்து நிற்பதும் வியாபகம் எனப்படுவதும் தனது ஆதித் தோற்றமாய்க் காணப்படுவதுமாகிய மாயையை மாயை என்னும் கற்பனையை — அவித்தயை — கிரந்தியை — அத்தியாரோபவஸ்துவை — பிரபஞ்சமாகிய மூன்னிலையை நிறைகண்டு பஞ்சீகரணித்து அம்மாயையாகிய இருளை — அஞ்ஞான மறைப்பை நீக்கிய — வென்ற — மாற்றிய வித்தகச் சித்தராகிய தத்துவப் பெரியாரால் கண்டு அடையப்படுவதும் அவித்தையான் மயங்கும் ஏனைய உலக மாக்களால் கண்டு அடையமுடியாததுமாய மெய்யர்க்கு மெய்யாய்ப் பொய்யர்க்குப்பொய்யாய்விளங்குவது எதுவோ, சமய கோடிகள் எல்லாம் தன் தெய்வம் ஏன்தெய்வம் என்று பெரு வழக்கிட்டுஒலிடவும் அவற்றிற்கு அணுவளவும் எட்டாததாய் அச் சமயகோடிகளை யெல்லாம் தனக்கு அங்கமாகக் கொண்டுஅரசு வீற்றிருக்கும்சைவசமயம் என்னும் குருநெறியாகிய சிவகதி பெற்ற மெய்யடியார்க்கு "நறுமலர் எழுதரு நாற்றம் போல்" "உற்ற ஆக்கையின் உறுபொருள்" ஆகிக் கண் கூடாகி நின்று அன்னவர் உடலில் உள்ள அசுத்த நிறையை அழித்து அஃதாவது அழிதரும் ஆக்கையாகிய புலாற்றுருத்தியை அளிதரும் ஆக்கையாகிய பூந்துருத்தியாய் மாற்றிப் பிணி மூப்புச் சாக்காடும் பிறவியும் ஒழித்து துவிஜர்களாகிய அவ் அந்தணரது அமலதநுவில் பூரணமாய்க் குடி புகுந்து அருளமுத வடிவாய் அள்ளூறி நின்று பேரின்பம் அளித்து வீடு பேருய் நிற்பது எதுவோ, ஒரு நாமம் ஒருருவம் ஒன்றும் இல்லாததும் சத்தியமாகிய தன்னைக்கண்ட அம்மெய்யடியாராகிய தத்துவப் பெரியாரால் ஆயிரம் திருநாமங்களால் — நிறைமுறையோடு கூடிய பலப்பல திருநாமங்களால் — கௌணப் பூரணமாகி மிளிரும் திருமறைகளால் போற்றப் படுவது எதுவோ அதுவே — அவ் அமலப் பேரொளியே — மைதீர் சுடரே — அமல நந்தி ஒளியே — அமல அக்கினியே சிவம் எனப்படும் என்பது.

மேலே கூறியவாறு சிவம் என்னும் செம்பொருளின் இயல்பை நன்கு புலப்படுத்துவனவாய்த் தத்துவப் பெரியார் அருளிய நூல்களிலும் பிற நூல்களிலும் காணப்படும் பிரமாணங்கள் மிகப்பலவாகும். அவற்றுள் ஒரு சில இங்கே காட்டப்படுகின்றன.

"இருநிலனுய்த் தீயாகி நீருமாகி
இயமானனு யெரியுங் காற்றுமாகி
அருநிலையதிங்களாய் ஞாயிருகி
ஆகாச மாயட்ட மூர்த்தமாகிப்
பெருநலமுங்குற்றமும்பெண்ணுமாணும்
பிறவுருவுந் தம்முருவுந் தாமேயாகி
நெருநலையா யின்ருகி நாளையாகி
நிமிர்புன்சடையடிக ணின்றவாறே"

"மாலாகி நான்முகனுய் மாபூதமாய்
மருக்கமா யருக்கமாய் மகிழ்வுமாகிப்
பாலாகியெண்டிசைக்குமெல்லையாகிப்
பரப்பாகிப் பரலோகந் தானேயாகிப்
பூலோக புவலோக சுவலோகமாய்ப்
பூதங்களாய்ப் புராணன்ருனேயாகி
ஏலாதன வெல்லாமேல் விப்பானுய்
எழுஞ்சுடராயெம் மடிகணின்றவாறே"
(அப்பர் தேவாரம் நின்ற—திருத் தாண்டகம் செ. 1, 10.)

"நற்பதத்தார் நற்பதமே ஞானமூர்த்தி
நலஞ்சுடரேநால்வேதத்தப்பானின்ற
சொற்பதத்தார் சொற்பதமுங் கடந்து [நின்ற
சொலற்கரிய சுழலாயிது வுன்றன்மை
நிற்பதொத்து நிலையிலா நெஞ்சந்தன்னு
ணிலாவாத புலாலுடம்பே புகுந்து [நின்ற
கற்பகமே யானுன்னை விடுவேனல்லேன்
கனகமாமணி நிறத்தெங் கடவுளானே"
(ஷை தனித்திருத்தாண்டகம் செ. 4.)

"ஆதியாயவனுரு மிலாதவன்
போதுசேர்புனை நீண்முடிப்புண்ணியன்
பாதிபெண்ணுருவாகிப் பரஞ்சுடர்ச்
சோதியுட் சோதியாய் நின்ற சோதியே"
(ஷை சித்தத்தொகைதிருக்குறுந்தொகை செ. 3.)

"......மெய்யர்மெய்ந் நின்றவர்க் கல்லா
தவர்க்கென்றும்
பொய்யர் புகலூர்ப் புரிசடையாரே"
(ஷை திருப்புகலூர் பண் இந்தளம் செ. 1.)

" தேடிக்கண்டுகொண்டேன்
திருமாலொடு நான்முகனும்
தேடித்தேடொணுத் தேவனை யென்னுளே
தேடிக்கண்டுகொண்டேன் "
(ஷை திருஅங்கமாலை செ. 12)

" ..........................................
உய்யவென் னுள்ளத்து ளோங்கார மாய்நி
[ன்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயாவெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணி
[யனே
வெய்யாய் தணியா யியமான னும்விமலா
பொய்யாயினவெல்லாம்போயகலவந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுட
ரே
..........................................
அன்பருக் கன்பனே யாவையுமாமல்லையுமா
சோதியனே துன்னிருளே தோன்றாப்[ஞ்
[பெருமையனே
ஆதியனே யந்த நடுவாகி யல்லானே
..........................................
..............பொய் கெட்டு மெய்யானுர்
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லா
[னே
.........................................."
(திருவாசகம்—சிவபுராணம்.)

" ..........................................
ஒருவ னென்னு மொருவன் காண்க
விரிபொழின்முழுதாய் விரிந்தோன்காண்க
..........................................
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமு மாதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
..........................................
பெண்ணுணவியெனும்பெற்றியன்காண்க
கண்ணு லியானுங் கண்டேன் காண்க
..........................................
அழிதரும் ஆக்கை யொழியச் செய்த
[வொண்பொருன்
இன்றெனக் கெளிவந் திருந்தனன்போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
..........................................
அன்று முக்கை யமைத்தனன்..............
..........................................

அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றியோனே "
(ஷை—திருவண்டப்பகுதி)

## திருமந்திரம்

" சிவனொடொக் குந்தெய்வந் தேடினு மில்லை, அவனொ டொப்பாரிங் கியாவரு மில்லை, புவனங்க டந்தன்று பொன்னொளி மின்னுந், தவனச் சடைமுடித் தாமரை யானே"

"தானேயிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே தடவரைத்தண்கட லாமே."
(சிறப்புப்பாயிரம் 5, 10.)

" அழிகின்ற சாயா புருடனைப் போலக், கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில், எழுகின்ற தீயிற்கற் பூரத்தை யொக்கப்,பொழிகின்ற விவ்வுடற் போமப் பரத்தே"
(8-ம் தந்திரம் விசுவக்கிராசம் செ. 1.)

## திருவாய்மொழி

" எகமூர்த்தி யிருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தி, ஆகி ஐந்து பூதமா யிரண்டு சுடராய் அருவாகி, நாகமேறி நடுக்கடலுட் டுயின்ற நாராயணனேயுன்,ஆகமுற்று மகத் தடக்கி ஆவியல்லல் மாய்த்ததே"

" பாஞ் சுடருருவா யழுக்குப் பதித்த வுடம்பாய்க், கரந்துந் தோன்றியு நின்றும் கைதவங்கள் செய்தும் விண்ணோர், சிரங்க ளால் வணங்குந் திரு விண்ணகர்ச் சேர்ந்த பின்,வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க் கும் வண்சரணே"

"வீடாக்கும்பெற்றியறியாதுமெய்வருந்திக்
கூடாக்கி நின்றுண்டு கொண்டுழல்வீர் —
[வீடாக்கும்
மெய்ப்பொருடான் வேத முதற்பொருடா
[ன் விண்ணவர்க்கு
நற்பொருடான் நாராய ணன்"

## சித்தர் பாடல்

" நாதவேதமடி அகப்பேய்
நன்னடங் கண்டாயே
பாதஞ் சத்தியடி அகப்பேய்
பரவிந்து நாதமடி "

" விந்து நாதமடி அகப்பேய்
மெய்யாக வந்ததடி
ஐந்து பெரும்பூதம் அகப்பேய்
அதனிட மானதடி"

## மணிமேகலை

27-வது சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதை.

" ..........................................
என்றவன் றன்னை விட்டிறைவனீசனென
நின்ற சைவவாதி நேர்படுதலும்
பரசு நின்றெய்வ மெப்படித்தென்ன
இருசுடரோடிய மானனைம் பூதமென்
றெட்டு வகையுமுயிரும் யாக்கையுமாய்க்
கட்டிநிற் போனுங் கலையுருவினோனும்
படைத்து விளையாடும் பண்பினோனும்
துடைத்துத் துயர் தீர் தோற்றத்தோனும்
தன்னில் வேறுதா னொன்றிலோனும்
அன்னோன் இறைவனாகுமென்றுரைத்த
[னன்"

நிலம் நீர் தீ வளி வெளி திங்கள் ஞாயிறுஉயிரென்னும் எண்வகைப்பொருளாய்—அட்டமூர்த்தமாய் அவற்றோடு கலந்து படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் தனக்கொரு விளையாட்டாகக்கொண்டு நடாத்தி உயிர்களின் கட்டுக்களை நீக்கி யருளித் தன்னின் வேருக ஒன்று மின்றித்தானே யாவுமாய் நிற்கும் சிவபரம் பொருளையே முழுமுதற்கடவுளாகக் கொண்டுள்ளது சைவசமயம் என்பதும், சீவர்கள் மாயாகாரியமாகிய தங்கள் சரீரத்தாலும் ஏனைய முன்னிலைப் பொருள்களாலும் அறிவு விளக்கம் பெற்று மாயா துன்பம் நீங்கி அழியாப் பேரின்பம் பெற்று வீடடைய வேண்டும் என்னும் அவா மிகப்பெற்றுக் குருவருளால் உண்மைநெறியைக் கடைப்பிடித்து (குருநெறி கடைப்பிடித்து) திருவருளுக்குத் தம்மை முற்றுக உணவாக்கித் தற்சுதந்தரம் என்னும் முனைப்பற்று இயற்கையோடு ஒத்து நின்று ஒப்புர வொழுகுதலாகிய அரிய பெரிய சகச நிட்டையாளராய் மாயாகாரியமாகிய முன்னிலைகளை நிறைகண்டு பஞ்சீகாணித்து அம்மாயையை வென்று—உறவுபடுத்தி—அடிப்படுத்தி சத்துவமாகிய அமலப் பேரொளியின் ஆக்கத்தால் அஃதாவது தங்கள் உடலில் சிவம் எனும் செம்பொருள் பூரணமாய்க் குடி புகுவதால் சாதலைத்தரும் அசுத்த

நிறைநீங்கப் பெற்றுப் பிணி மூப்புச் சாக்காடும் பிறவியும் அகன்று உடலும் உயிரும் ஒழிவற ஒன்றி அள்ளூருக்கையாய்ச் சூக்குமமாய் அருள்வடிவாய்ச் சிவாங்கமாதலே சைவ சமயப் பேறாகிய உண்மை முத்தி என்பதும் மேலேகாட்டிய பிரமாணங்களால் வெள்ளிடைமலையாம்.

"உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் [எழுதரு நாற்றம்போல்
பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்"
(திருவாசகம் அதிசயப்பத்து செ. 9.)

என உண்மையாகிய சத்தியத்தை சத்தியமாகிய சிவத்தைக் கண்கூடாகக் கண்ட மணிவாசக வள்ளல் அருளியவாறு சீவர்களாகிய நமது உடலில் உள்ளும் புறம்புமாய் நிற்கும் சிவம் என்னும் அமல ஒளியே—அமல நிறையே—அமல ஐகாரமே சத்துவம் என்று கூறப்படும். அமல நிறை அமல ஐகாரம் அமல ஒளி கந்தழி சிவம் சத்துவம் என்பன ஒன்றே. இச்சத்துவம் யாவற்றையும் வசித்து நிற்றலால்— வசப்படுத்தி நிற்றலால்— வகித்து நிற்றலால்—தாங்கி நிற்றலால். "வசி" என்று கூறப்படும். "வசி" என்பதன் திரிபே "சிவ" என்பது. சமயகோடிகளால் போற்றப்படுவதும், சீவகர்களால் அடையுமாறு முயலப்படுவதும், சகல சீவர்களுள்ளும் நின்று அவர்களின் துன்பங்களை ஒழிப்பதும், பாசங்கள் பற்றுக்களை நீக்கித் தானாகச்செய்து மீண்டுவாரா நெறியை அருளுவதும் இச்சத்துவமேயாகும். இச்சத்துவமாகிய சிவம் படிமுறையான் அடையப்படும் நெறிக்கு ஏற்பப் பலப்பல குறிகளால்—உருவங்களால் பேசப்படும். இதனை அடையும் நெறி கைகூடுதற் பொருட்டே பலப்பல அநுட்டானங்கள் மூர்த்தி தலம் தீர்த்தங்கள் தவங்கள் ஏற்பட்டுள்ளன. இச்சத்துவம் சத்து சித்தாய்—சத்தும் சித்துமாய் நிற்றலால் சிவமும் சத்தியும் எனவும், அப்பனும் அம்மையும் எனவும், சிவமும் விஷ்ணுவும் எனவும் பிறவாறும் பலப்பல மூர்த்தங்களாக (சாங்கோபாங்கப் பிரத்தியங்கங்களாகிய கற்பனைகளோடு) பெரியோரால் பேசப்படும். சத்தில்லாமல் சித்தில்லை. சித்தில்லாமல் சத்தில்லை. சிவம் இல்லாமல் சத்தியில்லை. சத்தியில்லாமல் சிவம் இல்லை. சிவம் இல்லாமல் விஷ்ணு இல்லை. விஷ்ணு இல்லாமல் சிவம் இல்லை. விரிப்பிற் பெருகும். சிவமும் விஷ்ணுவும் ஒன்றே என்பது அமயம் நேர்ந்துழி விளக்கிக் கூறப்படும்.

இச்சத்துவமாகிய சிவம் என்னும் செம்பொருளின் ஆதித் தோற்றம் மயக்கம் தருவதாகிய மாயை எனப்படும். தோன்றிமறைதலால் மாயை எனப்படும்—பொய்ம்மை எனப்படும். உண்மையோடு பொய்கலந்திருப்பதும், அவ்வுண்மை முதலில் பொய்த் தோற்றமாயே காணப்படுவதும், பின்பு மதிநுட்பத்தாலும் சான்றுகளாலும் ஆராயுமிடத்து இருளாகிய அப்பொய்ம்மை நீங்கி அடிப்படையில் ஒளியாகிய உண்மை காணப்படுவதும் இயற்கை அல்லவா? இதனைக் கண்கூடாகக் கண்ட தத்துவப்பெரியாரும் மாயையாகிய இருளே சத்தியத்தின் ஆதித்தோற்றம் எனவும், இருளின் அந்தத்திலே ஒளி காணப்படும் எனவும், அவ்விருளாகிய மாயைக்கூடாகவே அஃதாவது திருவருட் சகாயத்தால் அதனை உறவுபடுத்தியே உண்மையாகிய ஒளி காணப்படவேண்டும் எனவும் அஃது எளிதன்று எனவும் அருளிப் போந்தனர். பின்வரும் பிரமாணங்கள் இதனை நன்கு புலப்படுத்தும்.

"அண்டமாரிருளூடு கடந்தும்பர்
உண்டு போலுமொரொண்சுடரச்சுடர்
கண்டிங்காரறிவாரறிவாரெலாம்
வெண்டிங்கட்கண்ணிவேதியனென்பரே"
(அப்பர் தேவாரம்–சித்தத்தொகை–திருக்குறுந்தொகை செ. 2)

"சாணுகத் தன்னே யுழுந்திய மாணிக்கங்
காணு மளவுங் கருத்தழி வாரில்லை
பேணிப் பெருக்கிப்பெருக்கினைவோர்க்கு
மாணிக்க மாலை மனம்புகுந்தானே."
(திருமந்திரம்–7–ம் தந்திரம், சிவபூசை. [செ. 21)

"மாயையே சத்தியத்தின் ஆதித்தோற்றம்" எனப் பிறரும் கூறினர்.

"Illusion is the first appearance of truth" (Tagore)

ஆதலால் இம்மாயையை விட்டு மாயாகாரியமாகிய உலகத்தை விட்டு அப்பால் சென்று உண்மையைக்கண்டு அடைவதென்பது — முத்தியடைவதென்பது முடியாத காரியம். மாயையாகிய முன்னிலையை நிறைகண்டு உறவுபடுத்தியே உண்மையைக் கண்டு அடையவேண்டும் என்பது. லௌகிகமே பாரமார்த்திகமாகத் திரியவேண்டும் என்பதன் உட்பொருளும் இதுவே என்க. முகிலான் மறைக்கப்பட்ட சூரிய சந்திரர் போல மாயையாகிய இருளால்— அசுத்த நிறையால் –அழுக்கால்—களிம்பால் — பாசத்தால் மறைக்கப்பட்டிருப்பது சத்துவமாகிய சிவம். அசுத்த மாயாகாரியமாகிய அசுத்த பௌதிக தநுவே — அசுத்த நந்தியே ஈசுவரனை மறைத்திருப்பது. ஆதலால் நம் உள்ளும் புறம்பும், அமல நந்தியெம்பெருமானாகிய ஈசுவரனைக் காண்பதற்கு— சிவசம்பந்தம் ஏற்படுவதற்கு அசுத்த மாயாசரீரமாகிய நந்தி விலகவேண்டும். அஃதாவது காயமாயம் கழியவேண்டும் என்பது. மெய்யடியாராகிய நந்தனாருக்கு நந்தி விலகுதலால் சிவதரிசனம் உளதாயிற்று என்பதன் உண்மையும் இதுவே என அறிக. இதுபற்றியன்றோ

"காயமாயத்தைக் கழித்தருள் செய்யாய்"
(திருவாசகம்–செத்திலரப்பத்து, செ. 5.)
எனவும்,

"பாணனேன்படிற்றாக்கையைவிட்டுனைப்
பூணு மாறறியேன்"
(ஷை–திருச்சதகம் செ. 44.)
எனவும்,

கூறியருளினர் மணிவாசகப் பிரபு. இதனால், காயமாயத்தைக் கழித்து— படிற்றாக்கையை விட்டு அமல தநுவைப் பெறுதலே — எம்பெருமானைப் பூண்பதே—சத்துவம் திகழப் பெறு

தலே—சிவம் பிரகாசிக்கப்பெறுதலே—சிவமணம் கமழப்பெறுதலே சிவசம்பந்தம்—சைவம் என்பது கண்டுகொள்க. தான் அற்று நின்ற இடம் சைவம் என்றனர் பெரியார். இதன் பொருள் என்னே? தான் அறுதல் என்பது சீவத்துவம் நீங்குதல் அல்லவா? பஞ்சேந்திரிய வினை ஒழிவது அல்லவா? ஊனம் நீங்குவது அல்லவா? ஊனம் ஒளிமயமாவது அல்லவா? ஆதலால் ஊனம் ஆகிய ஊன் அற்ற இடமே—காயமாயம் கழிந்த இடமே சைவம் என்பது வெள்ளிடை.

"தானற நின்ற இடம் அகப்பேய்
சைவம் கண்டாயே
ஊனற நின்றவர்க்கு அகப்பேய்
ஊனமொன்றில்லையடி"

என்றனர் சித்தமூர்த்தி ஒருவர்.

......"ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்
[டென்னுள்ளமும்போய்
நான்கெட்டவாபாடித்........

(திருவாசகம்—திருத்தெள்ளேணம்—செ18) என மணிவாசகர் அருளியதும் அறிக.

இதனால் பெறப்படுவது யாது? சத்துவமாகிய சிவம்சிவம் என்னும் அமல அக்கினி அணு அணுவாகக்கதி பெற்று—அதிகரித்துத் தலைமை பெறுங்காலமே—சமயமே—சிவகதியே—சிவசமயமே சைவசமயம் என்பதாம். மாயையாகிய இருளால் மயங்கும் சீவர்கள்—இருளையே ஒளி எனக்கண்டு களிக்கும் சீவர்கள், சைவபரிபாலகனாகிய உண்மைக் குரவன் அருளாலன்றி, இச்சைவ சமயத்தைத் தாமாக அறிந்து அடையமுடியாது. இதன் அநுட்டான விதிகள் சீவர்கள் சடபேதம் கர்மபேதம்—பக்குவபேதம் நோக்கிச் சற்குருநாதனால் அருளப்படுவனவாதலால் உலகில் நூல்கள் வாயிலாக வழங்குவது முடியாத காரியம். ஆதலால் குருநெறியாகிய சிவநெறியே சைவசமய நெறி எனப்படும். இச்சைவசமயம் சகல மதத்தினருக்கும், சாதியாளருக்கும்—சகலசீவர்களுக்கும் பொதுநெறியாய்வகுக்கப்பட்டுள்ளது; சைவபரிபாலகனாகிய நந்தியெம்பெருமானால் வகுக்கப்பட்டுள்ளது என்க. பின்வரும் வேதவாக்கு இவ்வுண்மையை நன்கு வற்புறுத்துகின்றது.

"சைவச் சமயத் தனிநாயகனந்தி
உய்ய வகுத்தகுருநெறியொன்று
[ண்டு
தெய்வச்சிவநெறி சன்மார்க்கஞ் சேர்தர
வையத்துளார்க்குவகுத்துவைத்
[தானே."

(திருமந்திரம் - 5ம் தந்திரம் உட்சமயம் [செ. 11).

குருநெறி சிவநெறி சன்மார்க்கம் சைவசமயம் என்பன ஒன்றேயாம். சைவசமயம் சில மரபினர்க்கோ சாதியாளர்க்கோ உரியதாய் வழங்கும் ஒரு மதமன்று. இதனால், சீவர்கள் உய்தியடைதற்கேற்ற நெறி குருநெறியாகிய சைவ சமயமே என்பது தடக்கை நெல்லிக்கனி என விளக்கம் பெறுதல் கண்டுகொள்க. இவ்வாறு கூறப்படுதலால் சமயங்கள் என உலகில் வழங்கும் மதங்கள் பயனற்றனவா? எனின், அன்று! அன்று! அவையெல்லாம் சீவர்கள் பக்குவத்துக்கு ஏற்ப அமைந்து இச்சைவ சமயத்தை அடைதற்குத் துணை புரிவனவாதலால் பயனற்றன எனக் கூறப்படா என்பது. இதனாற்றான் சமயகோடிகளை யெல்லாம் தனக்கு அங்கமாகக் கொண்டு அரசு வீற்றிருப்பது சைவ சமயம் எனக்கூறப்பட்டது என்க. சகல சீவராசிகட்கும் பொதுவான இயற்கை நெறியாகிய சத்திய நெறியே சைவ சமயம் என்க. சத்துவமாகிய சிவமே சமய கோடிகளால் பலப்பல நாமரூபங்களால் போற்றப்படுதலால், உலகில் வழங்கும் பௌத்தம் கிறீஸ்துவம் முதலியனவும் அகம்அகப்புறம் புறம் புறப்புறம் என்பனவாகத்தான் பிறவாறு தான் பலரால் ஆக்கமுற்றனவும் இன்னும் புதியனவாய் ஆக்கமுறுவன உளவேல் அவையும் சைவ சமயத்துக்கு அங்கமாய் அமைவனவேயன்றி வேறல்ல. அஃதாவது சத்திய நெறியாகிய சைவசமயமே சீவர்கள் கர்மத்துக்கு — பக்குவத்துக்கு ஏற்பப் பலப்பல மதங்களாக — கொள்கைகளாகத் திரிந்து வழங்குவது என்பதாம்.

" விரிவிலா அறிவினர்கள் வேறொரு சம
[யஞ்செய்து
எரிவினாற் சொன்னாரேனுமெம் பிராற்
[கேற்றதாகும்..."

(என்பது அப்பர்தேவாரம், திருப்பெருவேளூர் திருநேரிசை செ. 9.)

எச்சாதியானாயினும் எம்மதத்தவனாயினும் பக்குவமுடையவன் குருவருளால் இச்சைவசமயத்தை அடையலாம். குருநெறி கண்டு நித்தியத்துவம் அடைந்த இருடிகள் முனிவர்களுள்ளும் அறுபத்துமூவர் ஆழ்வார் எனப்பட்டோருள்ளும் பல சாதியாளரும் பல மதத்தவரும் இருந்தமை அறிக. பின் வரும் வேதவாக்கும் இவ்வுண்மையை உணர்த்துகின்றது.

" இத்தவ மத்தவ மென்றிரு பேரிடும்
பித்தரைக் காணி னகுமெங்கள் பேர்நந்தி
எத்தவ மாகிலெ னெங்கு பிறக்கிலென்
ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புகலாமே"

(திருமந்திரம் 5-ம் தந்திரம் உட்சமயம் செ. 2.)

[ ஒத்துணர்தல் — குருவருளால் அடையப்படும் இயற்கையோடு ஒத்து நிற்றலாகிய சகச நிட்டையைக் குறித்து நின்றது. "ஒத்துச்சென்று தன் திருவருட் கூடிடுமுபாயமதறியாமே........" (திருவாசகம் அதிசயப்பத்து செ. 4.) என மணிவாசகசிவம் அருளியதும் அறிக. ஊர் — ஆரூர் — புகலிடம்.]

வேதாகம புராண இதிகாசங்களும், தேவார திருவாசக முதலியனவும் சங்கச் சான்றோர் நூல்களும் சத்திய நெறியாகிய இந்நெறி ஒன்று உளது என நன்கு வற்புறுத்துகின்றன. விரிப்பிற் பெருகும். அமையம் நேர்ந்துழி இவ்வுண்மை மேலும் விளக்கிக் கூறப்படும்.

இதுகாறும் கூறியவைகளால் சிவ சம்பந்தமுடையது சைவம் என்ப தும், அதனை அடையச் செய்யும் குரு நெறியே சைவசமயம் என்பதும், சைவ சமயமே சகல சீவர்களுக்கும் உரியதான இயற்கை நெறியாகிய சத்திய நெறி என்பதும், உலகில் வழங்கும் மதங்கள் எல்லாம் அதற்கு அங்கங்களாகி அமையும் என்பதும் ஒருவாறு உணரத்தகும்.

## தலையாய அறம்

உலகத்திலே ஒருவன் உண்மையை உணர்ந்து அதனைக் கடைப்பிடித்து ஒழுகிக் கட்டுக்கள் அற்று வீடு பேறு அடையும்பேராற்றல் உடையனுயின், அவன் அறியவேண்டியவற்றுள்ளே தலையாயது என்னை? எனின், அதுவே இச்சிறிய கட்டுரையில் ஒருவாறு ஆராய்வான் எடுத்துக்கொண்ட பொருளாகும்.

"மனிதன் யோனிவாய்ப் பட்டுப் பிறக்கிறான்; இறக்கிறான். இஃதோர் மாயக்கூத்தாய் இருக்கின்றது. இந்த உடலை எனதென்று நம்பியிருக்க, என்னைப் படைத்த கடவுள் கயிலை என்னும் ஓரிடத்தில் வீற்றிருக்கிறார் எனவும், அவரே எனக்கு அன்னம் தண்ணீர் முட்டின்றி அளித்து என்னைக் காத்துக்கொள்ளுகிறார் எனவும் நம்பியிருக்க, மாடும் மனைவிமக்களும் மற்றைய சுற்றமும் வீடும் பிறபொருள்களும் எனக்கே உரியன என்று நம்பியிருக்க, அந்தோ! திடீர் என்று காலன் என்பவன் ஒருவன் மிகுந்த அச்சம் விளைக்கும் கோர வடிவுடன் தென் புலத்திலிருந்து எருமைக் கடாவில் ஏறிவந்து என்னைக் கொண்டு போய் விடுகிறான். இதுதான் தலைவிதி. கல்வியில் எத்துணை வல்லபம் படைத்தவரேயாயினும், அரசரேயாயினும், சக்கிரவர்த்தியே எனினும் ஒருவராலும் இத்தலைவிதியை மாற்ற முடியாது. சாதல் என்பதைத் தவிர்க்க முடியாது. இது கடவுள் இட்ட சட்டம். என்னே! இம்மாயத்தின் பெட்பு" என வியப்படைகின்றான் ஒருவன்.

"கடவுளை வழிபட வேண்டியது அவசியம். அவர் இருக்கும் இடத்துக்கு என்னை அழைத்துக்கொள்வார். ஆதலால் அதன் பொருட்டாக யான் செயற்பாலது என்னையெனின், என் தகுதிக்கு ஏற்றவாறு ஏழைகட்கும் விருந்தினர்க்கும் மனம் கோணுது அன்னம் அளித்து உறவினர்க்கும் வேண்டுவன செய்து பிதுர்க்கடனாற்றி அவரைத் திருப்தி செய்ய வேண்டிய தே முறையாகும்" என உணர்ந்து அமைகின்றான் மற்றொருவன்.

"அந்தோ! காலன் என்னை விடமாட்டான். சாதலைத் தவிர்க்க முடியாது. ஆதலால் பட்டினியிலிருந்து விரத முதலியவைகளை அநுட்டித்துச் சில கிரியைகளையும் செய்து மூர்த்திதலம் தீர்த்தம் என நூல்கள் முறையிடுவதற்கு ஏற்ப மூர்த்தி வழிபாடு தலயாத்திரை தீர்த்தஸ்நானம் முதலியனவும் செய்து, பூதானம், கோதானம், வஸ்திரதானம், சுவர்ணதானம் முதலிய தானங்களையும் புரோகிதர்க்கும் பிறர்க்கும் செய்து, பிதுர்களையும் சுற்றத்தாரையும் விருந்தினரையும் ஓம்பி மூன்று காலமும் கோவிலுக்குப் போய்ச் சுவாமி தரிசனமும் செய்து வரவேண்டும். இவற்றால், நான் இறந்தவுடன், நேரே கடவுள் திருவடியை அடைதல் திண்ணம்." என உறுதிகொண்டு அமைகின்றான் வேறொருவன்.

இம்மூவரும் உண்மையை உணரும் ஆற்றல் இல்லாத அபக்குவிகளே எனத் தேவர் சொல்லாமல் சொல்லி,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க [லொனென்றாங்
கைம்புலத்தா றோம்பறலை"
(குறள், இல்வாழ்க்கை, செ. 3)

என்னும் செய்யுளால் உண்மை நிலை அடையவேண்டியவன் ஒருவன் செயற்பாலதலையாய அறம் இன்னது என உண்மையைத் தெரிவிக்கின்றார்.

(தொடரும்.)

## மகாத்மா காந்தியின் புதுவை விஜயம்

ஹரிஜன சேவையை முன்னிட்டு, மகாத்மா காந்தியடிகள் தென்னிந்தியா சுற்றுப் பிரயாணத்தின் பொழுது புதுச்சேரிக்கு விஜயம்செய்வாரென்று தகுந்த இடத்திலிருந்து செய்தி கிடைத்திருக்கின்றது. இவ்வூரிலுள்ள ஜனங்கள் மகாத்மாவின் வருகையை அதிக ஆவலுடன் எதிர்பார்த்திருக்கின்றனர். ஹரி ஜனங்களும், மாணவர்களும், மற்றுமுள்ள சங்கங்களும் மகாத்மாவின் வரவை நன்கு உபயோகித்துக் கொள்வார்களென்று தெரியவருகின்றது. காந்தியடிகளின் ஹரிஜன சேவைக்காக அச்சமயம் ஒரு நிதி சேகரித்து அளிப்பார்களென்று நம்பப்படுகிறது.

## Nouveau Cabinet
## (புதிய மந்திரி சபை)

Présidence Conseil, Interieur ... Chautemps.
Justice.................Reynaldy.
Affaires Etrangères...Boncour.
Finances..................Bonnet.
Budget...........Marchandeau.
Guerre.................Daladier.
Marine...................Sarraut.
Air...............................Cot.
Education Nationale de Monzi.
Travaux Publics......Paganon.
Commerce et Enseignement Technique—le Corgon.
Education Phyique Adolphe—Chéron.
Air (S. Secretaire d'Etat)... Delasalle.
Colonies..................Dalimier.

## பிரஞ்சிந்தியா சட்டசபை திறப்பு விழாவில்

### மேன்மைதங்கிய நமது குவர்னர் துரையவர்கள் செய்த நீண்ட பிரசங்க சாரத்தின் முக்கிய அம்சம் :

நமது குவர்னர் துரையவர்கள் புதுவைக்கு விஜயம் செய்து சொற்ப நாளே ஆயினும், பொது ஜனங்களுடைய கஷ்ட நஷ்டங்களையும் ஊர், கிராமங்களிலிருக்கும் தண்ணீர் வசதிக் குறைவுகளையும், கல்வி இலாக்காவில் ஏற்பட்டுள்ளவிருத்திக் குறைவையும் உணர்ந்து அதை நிவர்த்திக்க வேண்டிய மார்க்கங்களை அறிந்து கனம் சட்டசபை அங்கத்தினர்களுக்கு வற்புறுத்துக் கூறியதை நன்கு பரிசீலனை செய்து பார்க்கும்போது துரையவர்களின் பேராற்றலையும், அவர் பெருந்தன்மையையும், விசால நோக்கங்களையும் வெள்ளிடை மலைபோல் விளக்கிக் காட்டுகின்றது.

### முக்கிய அம்சம்.

பொது ஜனங்களின் உய்வுக்கு இன்றியமையாத நீர்ப்பாய்ச்சல், சுகாதாரம், இவைகளில் புதுவையானது மிகுந்த பிற்போக்கான நிலைமையில் இருப்பதைக்கண்டு மிக வருத்தமுற்று அதை நிவர்த்திக்கப் போதிய பணம் அத்தியாவசியமானதால் குவர்ன்மெண்டாரிடம் கடன் வாங்க உத்தேசித்திருக்கும் தொகையில் ஒரு முக்கியமான பகுதியை உபயோகித்துக் கொள்ளுமாறு சட்ட சபை அங்கத்தினர்களுக்குத் தனது வேண்டுகோளாகத் தெரிவித்திருக்கிறார்.

பிரஞ்சுக் குடிகளில் 6 வயது முதல் 13 வயது வரையிலிருக்கும் சிறுவர்களுக்குக் கல்வி ஞானம் போதியவரை இல்லாதபடியால் இந்நிலைமை மிகவும் கேவலமானதெனவும், இதைச் சீர்படுத்த வேண்டியதவசிய மென்றும், உள்ளூரிலும், வெளியூர்களிலும் இருக்கும் கல்விக் கூடங்கள் கேவலமான நிலைமையில் இருப்பதே இதற்குத் தக்க காரண மென்றும் சட்டசபை அங்கத்தினர்கள் இவ்விஷயத்தில் அதிக கவனம் செலுத்தக் கடமைப் பட்டுள்ளார்கள் என்றும், பொருளாதாரம் இதற்கு இடந்தரவில்லை என்ற காரணத்தை அங்கத்தினர் அவர்கள் கொள்வார்களாயின் மேனாட்டிலிருந்து இவ்விடம் அதிகாரிகளாக வந்து இருப்பவர்களுக்குப், பிரான் மூலமாகக் கொடுக்கும் சம்பளங்களில் ஏற்பட்டுள்ள நாணய மாற்ற சிக்கலை ஒருவாறு ஒழுங்கு செய்து விட்டால் பொது நன்மைக்கு வேண்டிய பொருளாதாரக் குறைவு நிவர்த்தியாகிவிடு மென்றும் தாம் பூரணமாக நம்புவதாக எடுத்துக் காட்டியிருக்கின்றார்.

தமிழ் மக்கள் அனைவரும் தங்கள் தாய்ப்பாஷையாகிய தமிழைக்கற்பதிலும், தங்கள் பிள்ளைகளுக்குக் கற்பிப்பதிலும் சிறிதேனும் கவனம் செலுத்தாமல் இருப்பதைப் பார்க்கத் தாம் மிக்க கவலையடைவதாகத் தெரிவித்ததோடு அமையாது தமிழ்க்கல்வி கட்டாயமாகப் போதிக்கப் பட்டு அபிவிருத்தி யடைய வேண்டுமென்றும் அப்பாஷையில் உயர்தரக் கல்விக்குப் பிரஞ்சு பாஷைக்கு இருப்பது போலப் பட்டங்கள் அளிக்கப் பட வேண்டு மென்றும் தனிப்பள்ளிக்கூடங்கட்குப் போதிய ஆதரவு அளிப்பதில் அங்கத்தினர் அவர்கள் அதிக கவனம் செலுத்தக் கடமைப் பட்டுள்ளார்கள் என்றும், வற்புறுத்தலாகவும மிகத்தெளிவாகவும் விமரிசையாகவும் அதிக நயத்தோடும் எடுத்துக் காட்டி அங்கத்தினர்களுக்கு நல்வரவு கூறித் தம்முடைய பிரசங்கத்தை முடித்துவிட்டு, சட்டசபையினின்று அதிக கௌரவத்தோடும், பெருந்தன்மையோடும் வெளியேறித்தம்முடைய மாளிகைக்குச் சென்றார்.

## கோன்சேய்லொக்கால்கூட்டம்.
(Conseil Local.)

புதுவை கோன்சேய் லொக்கால் கூட்டம் ஸ்ரீமான், அவோக்கா மரி சவரிப்பிள்ளை அவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்ற பொழுது குவர்ன்மா பிரதிநிதியாக ஒலெம்பியாத் (Olimpiade) துரையவர்கள், விஜயம் செய்து சர்க்காரால் தயாரிக்கப்பட்ட வரவு செலவு திட்டத்தை ஷை கூட்ட அங்கத்தினர்களுக்குப் பரிசீலனை செய்வதற்கு ஒப்புவித்தார். அத்திட்டத்தை ஷை கூட்டத்தில் பிரசன்னமாயிருந்த அங்கத்தினர்களனைவரும் பரிசீலனை செய்து 1934ம் வருஷக்குச் சில மாறுதலுடன் ஷை வரவு செலவு கணக்கைத் திட்டம் செய்தனர்.

### மாறுதல்கள்.

1. ஜனங்களுக்குத் தானிய விருத்திக்குறைவினால் ஜீவாதார மூல நாடியாகிய அகவிலை மிகவும் கேவலமானதாகி விட்டதென்றும் அதனால் மிக நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்றும் அந்நிலைமையைச் சீர்ப்படுத்த நிலங்களுக்குச் சர்க்காரால் விதிக்கப்பட்ட தீர்வையில் 100க்கு 33 1/3 ரூ குறைக்க விடுவதே தக்க பரிகாரமென்றும் முடிவு செய்தனர். இக்காரணத்தினால் ஏற்படும் குறைவு தொகையை சரிப்படுத்த சர்க்கார் உத்தியோகஸ்தர்களில் வருடத்துக்கு 1000 ரூ. முதல் 2000 ரூ. வரை சம்பளம் பெறுபவர்களுக்கு 100-க்கு 3 ரூ. விகிதமும் உத்தியோக வரும்படி (emolument) வருடத்தில் 1000-ரூபாய் பெறுபவர்களுக்கு 100;க்கு 1 ரூ. விகிதமும் குறைத்துவிடும்பக்ஷத்தில் வரவுசெலவு திட்டம் சரிசெய்யப்படும் என்றும் தீர்மானித்து அதைச் சர்க்காருக்குத் தெறிவிக்கிறதென்றும் முடிபு செய்தனர்.

2. கல்வியிலாக்காக் காரியதரிசியாயிருந்து உபகாரச்சம்பளம் (Pension) பெறுபவராகிய ஸ்ரீமான் கையார் என்பவர் பிரஞ்சிந்தியா குடிகள் அனைவருக்கும் எவ்வித வித்தியாசமின்றிக் கட்டாயக் கல்வி போதிக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்தினார்.

3. வில்வநல்லூருக்கும் புதுவைக்கும் இடையில் காராமணிக்குப்பம் என்னும் ஊருக்கு அருகில் தென்னிந்திய ரெயில்வே கம்பெனியார் ஒரு புகைவண்டி நிலையம் (Railway station) ஏற்படுத்துமாறு ஷை கம்பெனியாரை சர்க்கார் கேட்டுக்கொள்ள வேண்டுமென்று முடிபு செய்து சர்க்காருக்கு ஷை முடிவைத் தெரிவித்தனர்.

## "வித்தகம்"
### சந்தா விபரம்.

வருட சந்தா

உள் நாட்டிற்கு முன் பணம் ரூ. 3-0-0
வெளி நாட்டிற்கு ,, ,, ரூ 4-0-0

வித்தக நிலையம்
புதுச்சேரி.
(Fr. India.)

"வித்தகம்"
### விளம்பர விகிதம்.

வியாபார விளம்பரம் அங்குலம் 1-க்கு ரூ. 0—8—0

கோர்ட்டு விளம்பரம் அங்குலம் 1க்கு ரூ. 1—0—0

☞ நீடித்த விளம்பரங்களுக்கு தனி விகிதம்.

வித்தக நிலையம்
புதுச்சேரி.
(Fr. India)

## ஏஜண்டுகள் தேவை

எமது "வித்தகம்" என்கிற வாரப் பத்திரிகையை விற்பனை செய்ய ஒவ்வொரு ஊரிலும் தக்க ஏஜண்டுகள் தேவை. விவரத்திற்கு எழுதவும்.

"வித்தகம்"
வித்தக நிலையம்
புதுச்சேரி.
(Fr. India)



Sandhanam Printing Works, Pondicherry. Le Gérant R. Nagarattinam.